


# நகரத்தார் இதழ்

மார்கழி -- 1991



மதுரை திருநகரில் 1-12-91ல் நடைபெற்ற இலவச திருமணத்தில் மணமக்கள்

## சமூக மாத இதழ்

ஆசிரியர்
சுப. செந்தமிழன்

ஓம்

தாய் தீப்பாய்ந்தாளுக்கு வணக்கம்

தமிழ் அன்னைக்கு வணக்கம்

செய்யும் தொழிலே தெய்வம்

# நகரத்தார் இதழ்

மலர் : 5 மார்கழி-1991 இதழ் : 7



ஆசிரியர் :

சுப. செந்தமிழன்

5, யானைக்காரச் சந்து

மீனாட்சி அம்மன் கோவில் தெரு

மதுரை-625 001



தமிழ் நாடே வாழ்க-எம்

தாய் நாடே வாழ்க

அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்

தமிழாகிய உயிர்தனையும் விழுமிய தமிழ்நாடே வாழ்க

புரட்சிக்கவிஞர்

பாரதிதாசனார்

# செட்டியார்களே, இளைஞர்களே பெண்களின் நல்வாழ்விற்கு துணை செய்யுங்கள்

இராசகுமாரி செந்தமிழன்

பெண்கள் திருமணத்தை நிர்ணயப்பவர்கள் ஆச்சிமார்கள் தான் என்றும், அவர்கள் தான் நமது பெண்கள் திருமணத்திற்கு தடையாக உள்ளார்கள் என்றும் கூறுவது ஏற்கத்தக்கதுயன்று ஆச்சிமார்கள் மாமியார சாமன், சீதனம் வாங்குவதில் கடுமையாக இருந்தாலும் செட்டியார்களும், தனது பிள்ளைகளும் சொன்னால் வீட்டுத்தலைவியான ஆச்சிமார்கள் மறுக்க மாட்டார்கள். செட்டியார்களும், நமது இளைஞர்களும் நினைத்தால் இந்தப் பிரச்சனையின் கடுமையில் பாதியாவது குறைக்க முடியும். நகரத்தார் இளைஞர் சங்கத்திலுள்ள அதன் உறுப்பினர்கள், குறிப்பாக தலைவர்கள்' செயலாளர்கள் பொறுப்பிலுள்ளவாகள் திருமணம் செய்யாதவர்களாக இருந்தால் மாமியார் சாமன், சீதனம் வாங்கமால் திருமணம் செய்து மற்றவர்களுக்கு வழி காட்ட வேண்டும் நம்மவர்கள் செய்து வரும் ஆலயப்பணிகள் அளவற்றவை பத்து கோவிலுக்கு திருப்பணி செய்வதை விட பணப்பிரச்சனை காரணமாக திருமணம் செய்ய இயலாத நிலையிலுள்ள பெண்ணுக்கு திருமணம் செய்வது பெரும் புண்ணியமாகும். இதை நம்மவர் நன்கு அறிவர் பெண் திருமணம் பற்றி எழுதியது போதும், பேசியது போதும், எழுதுபவர்களே, பேசுபவர்களே உங்கள் எழுத்துக்களை, பேச்சுக்களை செயலில் காட்டி மற்றவர்களுக்கு வழி காட்டுங்கள் பணப்பிரச்சனை காரணமாக திருமணம் செய்ய இயலாத நிலையிலுள்ள பெண்களை உங்கள் குடும்பத்தில் திருமணம் செய்யும் நிலையிலுள்ள ஆண் பிள்ளைகள் இருந்தால் அவர்களுக்கு திருமணம் செய்வித்து மற்றவர்களுக்கு வழிகாட்டுங்கள்.

ஆன்மீகம்

# சிதம்பரம்

சிதம்பரம் தென் ஆற்காடு மாவட்டத்திலுள்ளது.

**சிற்றம்பலம் :**

(சித் சபை) இக்கோவிலின் ஆதி அமைப்பு சிற்றம்பலம் சிதம்பர இரகசியத்தை அடிப்படையாகக் கொண்டது. சிற்றம்பலத்திற்கு முதலாம் பராந்தகச் சோழன் பொன்கூரை வேய்ந்தார்.

**சிதம்பர இரகசியம் :**

சிதம்பரம் பூலோக கயிலாயமாகும் நடராசப்பெருமானுகிய சபாநாயகரின் வலது பக்கத்தில் ஒரு சிறு வாயில் அவ்வாயிலுள்ள திரையை அகற்றினால் உள்ளே தங்கத்தால் ஆன வில்வதளமாலை தொங்குவது நமக்குத் தெரியும் அங்கு மூர்த்தி இல்லை. ஆனால் தீபம் காட்டபெறும். மூர்த்தி இல்லாத இடத்தில் தீபம் காட்டுவதுதான் சிதம்பர ரகசியமாகும் இறைவன் ஆகாய உருவில் உள்ளான்.

நடராசர் சிவகாமி சுந்தரியின் இருக்கை கல்லாலானது.

**சித்சபை :**

சித்சபைக்கு எதிரே கனகசபை உள்ளது. கனகசபை தாமிரத்தகடுகளால் வேயப்பட்டது.

**நிருத்தசபை**

கனகசபைக்கு தெற்கிலுள்ளது. இது நாட்டிய அறையாகும். சிவன்-காளிநடனம் தில்லைக் கோயிலின் கிழக்கு கோபுரத்தில் நாட்டியத்தின் இரண்டு வகைகள் கற்சிற்பங்களில் சித்தரிக்கப்பட்டுள்ளது. மேல் கோபுரத்திலும் இது போல் உள்ளது.

**இராச்சிய சபை**

இந்த ஆயிரக் கால் மணடபத்திலுள்ள ஒரு கல்லினாலான பெரிய உயரமான தூண்கள் பலடன் எடை உடையவை.

---

தமிழ்நாடு, திராவிடம், திரமிளம், திரமிழம், தமிழகம், தமிழ்நாடு என்ற வகையில் பெயர்கள் மாறி வந்தது.

புலவர் V. கந்தசாமி

---

அறிவியல்

# புதிய கண்டுபிடிப்புகள்

கா. இராமநாதன் அம்பத்தூர்—சென்னை

1) மடித்து வைத்துக் கொள்ளக் கூடிய மோட்டார் கார் டயரை அமெரிக்கா கண்டு பிடித்துள்ளது. இந்த டயருக்கு கிரட்ச் என்று பெயர்,

2) நீலகிரியிலுள்ள "ஆசியா டீ நிறுவனம்" மூலிகைத் தேயிலையை கண்டு பிடித்துள்ளனர் இதன் பெயர் 'டையபெடீ' இந்த தேநீரை தொடர்ந்து பருகி வந்தால் நீரழிவு நோய் குணமாகும்.

3) மனிதரத்தம் போன்ற செயற்கை ரத்தம் விரைவில் விற்பனைக்கு வரவுள்ளது. இந்த செயற்கை ரத்தம் எல்லா குருப் ரத்தம் உள்ளவர்களுக்கும் பயன்படக் கூடியது

4) தண்ணீருக்குள் இயங்கும் தானியங்கி டி, வி. கேமராவை லண்டனை சேர்ந்த மார்கோனி கம்பெனி கண்டு பிடித்துள்ளது இதன் மூலம் கடலின் அடியில் வாழும் உயிரினங்களை படம் பிடிக்க முடியும்.

---

விளையாட்டு உலகம்

1) டென்னிஸ் பந்தயங்களுக்குரிய சட்டங்களை முதன் முதலில் அறிமுகப்படுத்தியவர் வால்டர் விங்ஃபீல்ட்

2) உலகிலேயே கால் பந்தாட்டத்தில் அதிக கோல் போட்டவர் பிரேசிலைச் சார்ந்த பீலே என்பவராவர்,

3) கைப்பந்து விளையாட்டை கண்டுபிடித்தவர் வில்லியம் ஜிமோர்கன்

4) மகளிர் நீளம் தாண்டுதல் போட்டியில் உலகிலேயே முதன் முதலில் 7 மீட்டர் நீளம் தாண்டி சாதனை படைத்தவர் ரஷியாவைச் சார்ந்த பாதாவுஸ் கெனயாவர்.

---

# திருமணத்திற்கு நிதி உதவி வழங்கும் நகரத்தார் சங்கங்கள் & அறப்பணிக் கழகங்கள்

1988-நகரத்தார் இதழ்

1. சிங்கப்பூர் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் அறப்பணிக்கழகம்

இக்கழகம் திருமணங்களுக்கு நிதி உதவிகள் செய்யும் பணியினை 1-5-1966ல் தொடங்கியது திருமணம் ஒன்றுக்கு ரு 3000 விதம் ஆண்டு ஒன்றுக்கு 80 திருமணச் செலவிற்காக இக்கழகம் இலவசமாக வழங்குகின்றது. 1-1-83 முதல் அமுல்படுத்தப்பட்ட திட்டத்தின்கீழ் ஆண்டு ஒன்றுக்கு ஏழு, எட்டுத் திருமணங்களை வயிரவன்பட்டியில் சிறப்பாக நடத்தி வருகின்றனர். மேற்படி திருமணத்திற்கு 3 பவுன் எடையில் சிறு தாலி செயினும், இரண்டு பவுன் எடையில் கைக்கு காப்பும். அரை பவுன் எடையில் மஞ்சள் கயிற்றில் சிறுதாலிஒன்றும் ஆகமொத்தம் பவுன்எடை 5 1/2 செய்துகொடுத்தும் ரு 1500 வரை மாப்பிள்ளை பொண்ணுக்கு வேட்டி சேலை எடுத்துக் கொடுத்தும், திருமணத்திற்கு வருபவர்களுக்கு காலை மாலைச் சாப்பாடு செய்து வைத்தும் மற்றும் சில்லறை செலவுகள் செய்தும் வருகின்றனர்.

முகவரி: 127 F, செக்காலை வீதி, காரைக்குடி-623001.
பசும்பொன்மாவட்டம்.

---

2. திருச்சி நகரத்தார் சங்கம்

1985ம் ஆண்டில் திருச்சி நகரத்தார் சங்கத்தின் முயற்சியால் நடத்தப்படும் கூட்டுத் திருமணங்கள் தொடங்கப்பட்டது. கூட்டுத் திருமணத்தில் பங்கு கொள்ள விரும்புபவர் செயலாளர் திருச்சி நகரத்தார் சங்கம், ஒத்தமால் தெரு, திருச்சி-2 என்ற முகவரிக்கு கடிதம் எழுதி அதற்குரிய அச்சு விண்ணப்பத்தைப் பெற்று பூர்த்தி செய்து பெண், மாப்பிள்ளை பெண்ணுக்கு தந்தை, மாப்பிள்ளைக்கு தந்தை ஊர் பெரியவர் கையெழுத்திட்டு சங்கத்திற்கு அனுப்ப வேண்டும். ஒரு மாதத்திற்கு முன்பே விண்ணப்பம் அனுப்பப்பட வேண்டும் சங்கத்தின் சார்பாக திருமணத்திற்கு 3பவுனுக்கு திருமாங்கல்யம், பெண்ணுக்குப் பட்டுச்சேலை, மாப்பிள்ளைக்கு ஜரிகை வேட்டி

சட்டை பெண்ணுக்கு வெள்ளி மிஞ்சி ஆகியவை கொடுக்கப்படுகின்றது காலை மாலை உணவு வழங்கும் பொறுப்பு சங்கத்தைச் சார்ந்தது. கூட்டுத்திருமணங்கள் பிள்ளையார்பட்டியில் நடத்தப்படுகின்றது. திருமணத்திற்கு முதல் நாள் இரவே பெண்ணும், மாப்பிள்ளையும் அவர்களது உறவினர்கள் சிலரும் பிள்ளையார்பட்டிக்கு வந்துவிட வேண்டும். அவர்களுக்கு வேண்டிய உணவு, தங்கும் வசதிகள் செய்து தரப்படும் மாப்பிள்ளைக்கு மாலைகள் பெண்ணுக்கு பூ ஆகியவை களை சங்கமே வழங்குகின்றது. மணவறைச் சடங்கு வேவு ஆகிய வற்றுக்கு வேண்டிய பொருட்களை சங்கம் வழங்குகின்றது. முளைப்பாரி, நெல் விதைக் கொட்டை, மாப்பிள்ளைக்குரிய டர்பன சால்வை ஆகியவைகளை அவரவர்களே கொண்டு வரவேண்டும். திருமண அழைப்பிதழ்கள் சங்கத்தின சார்பில் அனுப்பி வைக்கப்படும்

---

3. பினாங்கு நாட்டுக்கோட்டை செட்டியார்கள் அறப்பணிக் கழகம்

முகவரி : 127F செக்காலை வீதி காரைக்குடி–623001
பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம்.
தொலைபேசி எண் :2442

திருமண உதவி :

ஒரு திருமணத்திற்கு ரு 2500யினை பினாங்கு நாட்டுக் கோட்டைச்செட்டியார்கள் அறப்பணிக் கழகம் கொடுத்து உதவு கின்றது விபரம் வேண்டுபவர் மேற்கண்ட முகவரிக்கு கடிதம் எழுதி விபரம் தெரிந்து கொள்ளலாம்.

---

4) பேரா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள், அறப்பணிக் கழகம்

முகவரி : 127E செக்காலை வீதி—காரைக்குடி—623 001
பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம்

ஒரு திருமணத்திற்கு ரு 3000- வீதம் கொடுத்து உதவுகின்றது.
தொலைபேசி எண் : 2442

---

5. காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திர மேலாண்மைக் கழகம்

முகவரி : 4 சிவன் கோவில் மேற்கு வீதி, காரைக்குடி-623 001.
பசும்பொன் முத்து இராமலிங்கம் மாவட்டம்

இந்து மத அபிமான சங்க கட்டிட மேல் மாடியில் இச்சங்க கட்டிட அலுவலகம் உள்ளது.|

காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திர மேலாண்மைக் கழகம் 9 திருமணங்களுக்கு ரூ 3500 விதம் ஆண்டு ஒன்றுக்கு கொடுத்து வருகின்றது.

---

6) அம்பத்தூர் நகரத்தார் மன்றம்

முகவரி : 10 நாச்சியார் இல்லம் Redhills Road—அம்பத்தூர்
சென்னை-53

தொழில் அல்லது பணி புரியும் ஊர்களில் திருமணம் நடத்துபவர்-திருமணம் ஒன்றுக்கு ரூ. 3500/- நன்கொடை அளிப்பதென்று முடிவு எடுக்கப்பட்டுள்ளது. வெளியில் நடைபெறும் திருமணத்திற்கு தலா ரூ. 151/- கொடுத்து உதவுகின்றது.

---

7) சேலம் நகரத்தார் சங்கம்

முகவரி : B-9 பேர்லாண்டஸ் சேலம்-636004
தொலைபேசி எண்—50245

வரும் விண்ணப்பங்களை குலுக்கிப் போட்டு மாதம் ஒன்று எடுத்து ரூ 2500/- விதம் நிதி உதவி வழங்கி வருகின்றது. அதற்குரிய விண்ணப்படிவத்தை சங்க முகவரிக்கு எழுதிய பெற்று பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும்.

---

பிள்ளையார்பட்டி : பிள்ளையார்பட்டி அருள்மிகு கற்பகவிநாயகர் கோவில் நகரத்தார் தங்கள் கோவிலைச் சார்ந்த ஏழை பெண்களுக்கு திருமண உதவியாக திருமணம் ஒன்றுக்கு ரூ5000/ விகிதம் வருடம் ஒன்றுக்கு 12 திருமணங்களுக்கு பணம் கொடுத்து உதவுகின்றனர்.

---

9) புதுக்கோட்டை நகரத்தார் இளைஞர் சங்கம்

ஒரு திருமணத்திற்கு ரூ. 2000/- விதம் கொடுத்து உதவுகின்றது. உள்ளூர் நகரத்தார்களுக்கு முதல் வாய்ப்பு உண்டு.

---

10) மூவாயிரம் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் அறப்பணிக் கழகம்

முகவரி 15 மார்த்தாண்டபுரம் முதல் வீதி, புதுக்கோட்டை 622 001

---

ஸ்ரீ விசாலம் சாரிடபிள் டிரஸ்ட் & ஸ்ரீ அருணாசலம் சாரிடபிள் டிரஸ்ட்

முகவரி; ஸ்ரீ விசாலம் சிட்பண்ட் லிட், நிர்வாக அலுவலகம். 7/117 ஒ எ. தெரு. பள்ளத்தூர்-623 107, காரைக்குடி வட்டம் பசும்பொன் மாவட்டம்

ஸ்ரீ ராம—மெய்யம்மை அறக்கட்டளை வழியே மாதம் ஒன்றுக்கு ரூ. 3000/- விதம் சீட்டு குலுக்கல் முறையில் இயலாத நிலையிலுள்ள ஏழை பெண்களின் திருமணத்திற்கு நிதி உதவி செய்கின்றது

---

குறிப்பு: பலரின் வேண்டுதலுக்கு இணங்கி 1988 நவம்பர் நகரத்தார் இதழில் வெளியிட்ட திருமண நிதி உதவி செய்திகள் மீண்டும் வெளியிடப்பட்டுள்ளது.

---

## நகைச்சுவை

ஒருவர் : என் மகள் புத்திசாலி
மற்றவர் : எப்படி சொல்றீங்க?
ஒருவர் : என் மகன் எந்த சினிமா படம் எந்த தேதியில் வருகிறது என்று நாட்குறிப்பில் குறித்துக் கொள்வாள்

---

டோபி : போவோமா ஊர்கோலம்
நண்பன் : டே நீ பாடாதே கழுதை வந்துவிடும்,
டோபி : துணி நிறையாக உள்ளது என் கழுதை காணவில்லை, மற்றொரு கழுதையாவது வருமென்று பாடுகின்றேன்.

செ, நிலவு
மதுரை

---

உ

# ஆருடம்

P சங்கர் 115, சின்னக்கடைத் தெரு, — தெற்குவாசல் — மதுரை-1

## 19—12—1991 to 20—1—92 வரை

மேஷம் :

தீர்த்த யாத்திரை சொத்துக்கள் வாங்குதல், புதிய தொழில் தொடக்கம், இடப்பெயர்ச்சியினால் நன்மை. சிலருக்கு குழந்தைகள் சம்பந்தப்பட்ட சுப செய்தி, திடீர் செலவுகள் ஏற்படும்.

ரிஷபம் :

பெரியோர் பகை எதிலும் கவனம் தேவை. குடும்பத்தில் பிரிவினை சொத்துக்கள் சம்பந்தப்பட்ட வில்லங்கம் ஏற்படும். கோர்ட்டு வழக்குகள் அரசாங்க தொல்லைகள் ஏற்படலாம் கவனம் தேவை.

மிதுனம் :

அஷ்டம சனி இருந்த போதிலும் காரியங்கள் தடையின் பேரில் மாத பிற்பகுதியில் நலம் உண்டு. பிரிந்தவர்கள் ஒன்று கூடுவார்கள். எதிர்பாராத சொத்துக்கள் வாங்கும் யோகம் உண்டு செவ்வாய் திசை நடப்பவர்கள் சாந்தி செய்து கொள்வது நலம்.

கடகம் :

பொருளாதார பிரச்சனை இருந்த போதிலும் கடுமையான பிரயாசையின் பேரில் சமாளித்தல் போதிலும், சிலருக்கு திடீர் தன பிராப்த்தி அன்னியர் மூலம் உதவிகள், தொழில் அபிவிருத்தி ஏற்படும், செவ்வாய் திசை நடப்பவர்கள் சாந்தி செய்து கொள்வது நலம்.

சிம்மம் :

குடும்பத்தில் சுப நிகழ்ச்சிகள் சிலருக்கு வாகனம் வாங்கும் யோகம் உண்டு, பூர்வீக சொத்துக்கள் கிடைத்தல் மாத பிற்பகுதியில் வெளி நாடு வெளி மாநிலம் சென்று வருதல் போன்றவை ஏற்படும்

கன்னி :

தாயார் உடல்நிலை பாதித்தல் சிலருக்கு இடப்பெயர்ச்சி கூட்டு தொழில் பார்ப்பவர்கள் பிரிவு போன்றவை ஏற்படும். சிலருக்கு ஆபரேசன் போன்றவை ஏற்படலாம். உத்யோகஸ்தர்களுக்கு மேலோர் பகை ஏற்படும்.

துலாம் :

எதிர்பாராத திடீர் பொருள் சேர்க்கை வீடு நிலம் வாங்குதல் இடப்பெயர்ச்சி போன்றவை ஏற்படும் வழக்கு விவகாரம் ஜெயம் தரும் மாத பிற்பகுதியில் சுபம் விரையம் உண்டு.

விருச்சிகம் :

தொழில் அபிவிருத்தி கூட்டு தொழில் பார்ப்பவர்கள் ஆதாயம் அடைவார்கள் வாகனம் வாங்குதல், புதுப்பித்தல் போன்றவை உண்டாகும். கேது திசை நடப்பவர்கள் விநாயகருக்கு சிறப்பு வழிபாடு செய்வது நலம்.

தனுசு :

தீர்த்த யாத்திரை குடும்பத்தில் சுப நிகழ்ச்சிகள் மாத பிற்-பகுதியில் இடப்பிரச்சனை மூலம் ஆதாயம் வியாபார அபிவிருத்தி சுக்கிர திசை நடப்பவர்கள் சாந்தி செய்து கொள்வது நலம்.

மகரம் :

ஜென்ம சனியின் பாதிப்பு இருந்த போதிலும் சிரமங்கள் ஓரளவு குறையும் இடப்பெயர்ச்சி சிலருக்கு ஏற்படும். வழக்குகள் போன்றவை ஏற்படலாம். சிலருக்கு உடல்நிலை பாதிப்பு ஏற்படும். சனீஸ்வரர் சுவாமிக்கு வஸ்திரம் தானம் செய்யவும்.

கும்பம் :

7½ சனியன் ஆரம்பம் இருந்த போதிலும் குரு பார்வை உள்ளதால் திருமணம் சுப நிகழ்ச்சிகள் பொருள் வரவு கூட்டு முயற்சியின் பெயரில் ஆதாயம் திடீர் பொருள் வரவு போன்றவை ஏற்படும்.

மீனம் :

எதிலும் காரியஜெயம் பிரயாணத்தினால் ஆதாயம் உடல் நலத்தில் கவனம் தேவை. அரசாங்க ஆதரவு தீர்த்தயாத்திரை மாத பிற்பகுதியில் வியாபாரிகள் ஆதாயம் அடைவார்கள்.

சுபம்

# தொழில்

அண்மையில் மத்திய அரசு வட்டி விகிதங்களை அதிகரித்து அறிவித்ததை அடுத்து பல பெரிய நிறுவனங்கள் தாங்கள் வழங்க வுள்ள டிபன்சர் கடன் பத்திரங்களுக்கு 17 சதம் வட்டி தர தீர்மானித்துள்ளன, இரண்டு நிறுவனங்கள் தங்கள் திட்டத்தை வெளியிட்டுள்ளன அவைகள்,

1) சௌத் இண்டியா விஸ்கோஸ்
2) ரிலையன்ஸ் இண்டஸ்டிரி

ஆகியவையாகும். இரண்டும் நன்கு வேரூன்றியுள்ள நிறுவனங்கள் உபரிநிதி உள்ளவர்கள் இந்த டிபன்சர்களில் முதலீடு செய்யலாம்.

— வி. கோபால் சென்னை

---

திரை உலகம்—நடனம்

1. கூத்தநூல் எழுதிய புலவர் சாத்தனார் எனும் புலவர்

2. தண்டு என்ற முனிவரால் வகைப்படுத்தப்பட்ட இறைவனின் நாட்டியம்தான் தாண்டவமாகும். தாண்டவத்தில் 12வகைகள் முக்கியமானவை.

3. நடன நிகழ்ச்சிகளில் சாகித்தயங்களை இயற்றித் தந்தவர்கள் முத்துத்தாண்டவர், பொன்னையாபிள்ளை, பாபநாசம் சிவன்.

4. ஆடற்கலையின் இரண்டு பிரிவுகள் தாண்டவம், லாஸ்யம்

8. அபிநயத்திற்குரிய வேதம், யஜுர்வேதம்

— புலவர் நடேசன், மதுரை

---

## காந்தியடிகள் விமானத்தில் பயணம் செய்தது இல்லை

---

காறைப்பாறைகள் நிறைந்த ஊராக முன் காலத்தில் இருந்தக் காரணத்தால் காரைக்குடி எனப் பெயர் வந்தது

---

## பாதரக்குடியும் பாடுவாரும்

குன்றக்குடிக்கும் கோவிலூருக்குமிடையிலுள்ளது பாதரக்குடி நகரத்தார்களுக்கு சிவதீட்சை (உபதேசம்) செய்து வைக்கும் பாதரக்குடி சுவாமிகள் மடம் அங்குள்ளது.

இந்த மடம் பாண்டிய மன்னரால் உருவாக்கப்பட்டது. பாடுவார் முத்தப்பா அய்யா அவர்கள் அடிக்கடி அங்கு வருவார் அந்நாளில் அந்த மடத்தின் தலைவராக இருந்த சேனாதிபதி அடிகளார் அவரது நெருங்கிய நண்பர் இருவரும் அடிக்கடி குன்றக்குடி சென்று முருகனை வழிபடுவர்.

பாடுவார்க்கு பாதரக்குடி மடம் பொங்கல் சீர் அனுப்பிவந்தது தொடர்ந்து இன்றும் பாதரக்குடி மடத்திலிருந்து பாடுவோரின் வாரிசுகளுக்கு பொங்கல் பானை அனுப்பப்பெற்று வருகின்றது. அதை இப்போது வாரிசுதாரர்கள் ஆண்டுக்கு ஒருவராக மாறி மாறி பெற்றுக் கொள்கின்றார்கள்.

பாதரக்குடி சேனாபதி அடிகளுடன் பாடுபவர் முத்தப்பா பழனிக்கு சென்றார் அங்கு சேனாபதி அடிகளுக்கு ஏற்பட்ட வயிற்றுப்போக்கு நோய் நீங்க வேண்டி பழனியில் பல பாடல்களை பாடுவார் பாடினார்.

அழகாபுரி இளங்கோவன்
காரைக்குடி

---

## அறம் கூற்றாகும்:

மக்களின் வாய்கள் மூடப்படும் பொழுது அறம் வாய் திறக்கின்றது.

மக்களின் காதுகள் செவிடாக்கப்படும் பொழுது அறம் காது கொடுக்கிறது.

மக்களின் கைகள் கட்டப்படும் பொழுது அறம் கையவிழ்க்கிறது

மக்களின் வாய்கள் அடைக்கப்படும் பொழுது அறம் வாயசைக்கிறது.

மக்களின் மனதில் நடுக்கம் தோன்றும்பொழுது அறம் அரசு கட்டிலை நடுங்கவைக்கின்றது.

பாவலேறுபெருஞ்சித்திரனார்

# வாசகர் எண்ணங்கள்

கோபுர தரிசனம்
கோடி பலன்தரும்
அண்ணாமலை கோபுரம்
அட்டைப்படம் அருமை
ஏழகப்பெருந்தெரு இனிய ஆய்வுரை
பிள்ளையார் நோன்பு பெருஞ்செய்தி தந்தது

நகைச்சுவைக் கவிஞர்—கரு. கருப்பையா
திருப்புவனம்

---

2) கார்த்திகை இதழ்கண்டேன். சுகாதாரக்கும்மிபாடல் நன்றாக இருந்தது. உபேந்திரன் அவர்கள் ஷேர் மார்க்கெட் எழுதுவது பயன்மிக்கதாக உள்ளது. வேந்தன்பட்டி பழனியப்பன் முயற்சி வரவேற்கத்தக்கது.

— M. V. அண்ணாமலை
மயிலை சென்னை-4

---

3) மாதம் மாதம் பெண்களுக்கென்று ஒருபகுதியை வெளியிடுங்கள். வேகமான கட்டுரைகள் தேவையில்லை. பெண்கள் திருமணம் பற்றி அடிக்கடி பேசுவதை, எழுதுவதை நிறுத்தி செயல் வடிவம் தாருங்கள்.

— கண்ணத்தாள்
புதுவளவு, பாகனேரி.

---

4) நகரத்தார் இதழை மாதம் மாதம் ஆர்வத்துடன் எதிர்பார்க்கின்றேன். காரணம் இதழில் செய்திகள் மிகுதியாக உள்ளது.

— R. கானளராசன்
தொழிற்பேட்டை
அம்பத்தூர், சென்னை

## பெண்கள் பகுதி

1. உயர்நீதிமன்றத்தில் முதலில் இடம் பெற்ற பெண் நீதிபதி பாத்திமாபீவி
2. பிரான்சு நாடாளுமன்றத்தில் அமர்ந்த முதல் பெண்மணி மேரிக்யூரி
3. அஞ்சல் தலையில் இடம் பெற்ற முதல் நடிகை கிரேஸ்கெல்லி
4. இத்தாலியின் முதல் பெண் டாக்டர் மரியாமாண்ட்டிசோரி
5. தடை ஓட்ட வீராங்கனை ரீட்டாஃப்ரியா

---

# மருத்துவம்

## உணவே மருத்துவம்

1. முள்ளங்கியை நாள்தோறும் உணவில் சேர்த்து வந்தால் கண்ணுக்கு நல்லது. வைட்டமின் A சத்து அதிலுள்ளது.
2. முள்ளங்கி நமது உடலிலுள்ள கார்பன்டை-ஆக்ஸைடை வெளியேற்றி நல்ல வாயுவான ஆக்ஸிஜனை உற்பத்திசெய்கின்றது
3. இதில் சோடியம் குளோரைடு உள்ளதால் மலச்சிக்கலை நீக்கும்
4. வெள்ளை முள்ளங்கி உடல் களைப்பை போக்கும்
5. நாளைக்கு இருவேளை உணவு
6 நாளைக்கு எட்டு குவளை தண்ணீர்
7. நாளைக்கு ஒருமணி நேரம் உடற்பயிற்சி
8. வாரத்திற்கு ஒருநாள் உபாவசம்
9. நாளுக்கு இருமுறை வழிபாடு.

— கி. சுப்பிரமணியன்
மதுரை-20.

---

## கடமை கண்ணியம் கட்டுப்பாடு

உரிமைகளைப் பெறவேண்டுமானால் கடமையினை செய்ய வேண்டும். கடமை செய்வதற்கு கட்டுப்பாடு தேவை. கட்டுப்பாடு மிக்கவர்களே கண்ணியம் மிக்கவர்கள் என்று உலகம் கூறும்.

அறிஞர் அண்ணா

---

# மதுரை திருநகரில் இலவச திருமணம்

மதுரை திருநகரில் முதன் முதலாக காரைக்குடி வீர. கரு அழகப்ப செட்டியார் அவர்கள் செல்வரும், திருநகர் பேரூராட்சி முன்னாள் தலைவரும் திருநகர் சவிதாபாய்பள்ளி தாளாளருமான திரு AL. வீரப்ப செட்டியார் அவர்கள் தனிப்பட்ட முறையில் திருமணச் செலவு முழுமையும் ஏற்று மிகச் சிறப்பான முறையில் காரைக்குடி சு. லெ. ம்ப, நாச்சியப்ப செட்டியார் அவர்கள் செல்வி கண்ணம்மைக்கும், கீழப்பூங்குடி வயி. ராம. ராமையா செட்டியார் அவர்கள் செல்வர் மீனாட்சி சுந்தரத்திற்கும் (வேஸ்டி காட்டன் மில் சூப்பர்வைசர்) 1-12-91 ஞாயிற்றுக்கிழமை மதுரை திருநகர் சித்திவிநாயகர் கோவில் அமைந்திருக்கும் கல்யாண முருகன் திருக் கல்யாண மண்டபத்தில் திருமணத்தை சிறப்பாக நடத்திவைத்தார்கள்.

சீதனம் ரூ 10000/-ம் மாமியார் சாமான் ரூ. 7000/- பவுன் 8ம், வீட்டுப்புழக்கத்திற்கு வேண்டிய பொருட்கள் அனைத்தையும் வழங்கி மிகவும் சிறப்பான முறையில் AL. வீரப்பசெட்டியார் அவர்கள் தானே முன்னின்று சிறப்பான முறையில் திருமணத்தை நடத்தி வைத்தார்கள். நமது ஊரில் நடக்கும் திருமணம் போல் காலைப் பலகாரம் மதியச் சாப்பாடும் சிறப்பாக பரிமாறப்பட்டது. இந்த நல்லபணியை செய்த AL வீரப்ப செட்டியார் அவர்களுக்கு எமது பாராட்டுக்கள் AL. வீரப்ப செட்டியார் அவர்களைப்போல் நம்மினத் திலுள்ள வசதி படைத்தவர்கள் திருமணம் செய்ய முடியாத நிலை யிலுள்ள பெண்களுக்கு திருமணம் செய்து வைத்தால் அது கோ புண்ணியமாகும்.

---

# நூலாய்வு

## காந்திய நெறிகள் :

தொகுப்பாசிரியர், அ. வல்லநாட்டான் M.A.C.C.T,
கண்டவராயன்பட்டி

காந்தியடிகள் 123வது பிறந்த நாளையொட்டி இப்புத்தகத்தை அ. வல்லநாட்டான் அவர்கள் வெளியிட்டுள்ளார்கள். அவர் சிறந்த எழுத்தாளர், தொகுப்பாளர் என்பதை நாம் முன்பே அறிவோம்.

1) சத்தியத்துடன் அகிம்சையும் இணைந்து விட்டால் உலகை அடி பணிய வைத்துவிடலாம்.

2) அகிம்சை நெறிகளை கடைபிடிப்பவர்கள் அஞ்சுவது கடவுளுக்கு மட்டுமே.

3) அகிம்சை மாற்ற முடியாததொரு கொள்கையாகும்.

4) அகிம்சை என்பது பணிவின் எல்லைக்கோடு.

இது போன்ற உயர்ந்த பல காந்திய நெறிகளை தொகுத்துத் தந்துள்ளார், அவருக்கு எமது பாராட்டுக்கள்.

# நமது செய்திகள்

## காவிரிப்பூம்பட்டினத்தில் இயற்பகை நாயனார் விழா

காவிரிப்பூம்பட்டினத்தில் இல்லையே என்னாத இயற்பகை நாயனார் விழா 25 12-91 முதல் 29-12-91 வரை சிறப்பாக நடைபெற உள்ளது

1) விழா நடைபெறும் சாயாவனம் திருக்கோவில், காவிரிப்பூம்பட்டினம் நகர விடுதிக்கு ½ பர்லாங்கு தொலை உள்ளது.

2) ஆண்டுதோறும் இந்த விழா மார்கழி மாதம் மகம் நட்சத்திரத்தில் காப்புக்கட்டி சித்திரை நட்சத்திரத்தில் முடிவுறும்.

3) இயற்பகை நாயனாரின் குருபூசை நட்சத்திரம்–உத்திரம்

4) விழா நடைபெறும் 5 நாட்களிலும் காவிரிப்பூம்பட்டின நகர விடுதியில் நம்பகுதி சமையல்காரர்களைக் கொண்டு சாப்பாடு வசதி செய்து தரப்படும்.

5) சாப்பாட்டிற்காக பொருளுதவியோ அல்லது பணஉதவியோ மனமுவந்து தருபவர்களிடமே பெற்றுக்கொள்ளமுடியும்.

காவிரிப்பூம்பட்டினம்
பழ தெ லெ. அருணாசலம்
காரைக்குடி

# அறிவிப்பு

திருச்சி : நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் ஆதரவில் திருச்சி ராப்பள்ளி நகரத்தார் சங்கம் முன்னின்று நடத்தும் கூட்டுத்திருமணம் பிரஜோற்பத்தி ஆண்டு தை திங்கள் 26ம் நாள் 9-2-92 ஞாயிற்றுக் கிழமையன்று பிள்ளையார்பட்டியில் நடைபெறவுள்ளது. இத்திரு மணங்களில் பங்குகொள்ள விரும்பும் நம்மவாகள் அதற்குரிய படிவத் தினை கீழ்கணட முகவரியில் பெற்று 20-12-92 க்குள் அனுப்பி வைக்க வேண்டும்.

முகவரி :

செயலாளர், நகரத்தார் சங்கம், நகரவிடுதி, 2 ஒத்தமால் தெரு, திருச்சி-2.

தொலைபேசி எண். 23318 PP.

---

## கோவில் மாநகர் ஜேஸிக்கு

### மாநில அளவில் இரண்டு விருதுகள்

16-ம் தேதியில் நடைபெற்ற 1000க்கு அதிகமான உறுப்பி னர்கள் கலந்து கொண்ட மாநாட்டில் மதுரை கோவில் மாநகர் ஜீனியர் சேம்பரின் 1991ம் ஆண்டின் சிறந்த மக்கள் தொடர்புக்காக அதன் தலைவர் இரா. சொக்கலிங்கத்திற்கு விருது வழங்கப்பட்டது. இந்த இரண்டு விருதுகள் ஒரே ஆண்டில் ஒரு கிளைக்கு கிடைத் துள்ளது. எங்களது ஆக்கப்பூர்வமான பணிகளுக்கு கிடைத்த வெற்றி என அதன் தலைவர் இரா. சொக்கலிங்கம் கூறினார். இவர் மதுரையிலுள்ள 13 அமைப்புகளில் முக்கிய பொறுப்புகளில் உள்ளார்.

---

காளையார் கோவில் : காளையார்கோவிலில் வேதாந்தமடத்தை திருவனம் செய்து சமாதி கொண்டு விளங்கும் பெருமைக்குரிய சமீன்தார் சுவாமிகள் என்ற பெருமைக்குரிய அருணாசல ஞான தேசிக சுவாமிகள் அவர்கள் 59வது ஆண்டு குருபூசை விழா பிரஜோத்பத்தி வருடம் மார்கழி மீ 6உ (21-12-91) சனிக்கிழமை யன்று மிருகசீரிஷ நட்சத்திரத்தில் நடைபெறும்.

---

மதுரை பழம்நீ லெ. மு. மு. முத்துமாணிக்கம் அவர்கள் 58வது ஆண்டு நிறைவை 28-10-91 அன்று மதுரையில் எளிய முறையில் கொண்டாடினார்கள்.

---

பழம் நீ பாதயாத்திரைக் குழு :

'பழம் நீ' பாதயாத்திரைக் குழுவின் சார்பில் 28-12-91 சனிக்கிழமை மாலை 5 மணியளவில் தானப்பமுதலித் தெருவிலுள்ள முத்தையா செட்டியார் கல்யாண மண்டபத்தில் பூசையும் பக்திப் பாடல்களும் நடைபெறும், கண்டனூர் அருளாடியார் அவர்கள் கலந்து கொள்கின்றார்கள். 29-12-92 மாலை 6மணிக்கு மதுரை வடக்காடி வீதியிலுள்ள திருவள்ளுவர் கழகத்தில் ஐந்தும்-ஒன்றும் என்ற தலைப்பில் கவியரங்கமும் நடைபெறும்.

---

பழநிப் பாதயாத்திரை : பழநி பாதயாத்திரை 14-1-92 செவ்வாய் கிழமை காலை குன்றக்குடியிலிருந்து தொடங்குகின்றது

---

செவ்வூர் : செவ்வூர் சோனையா கோவிலின் குடநீராட்டுவிழா விரைவில் நடைபெறவுள்ளது.

---

வலையபட்டி 2 11-91 அன்று வலையபட்டியில் வலையபட்டி யூனியன் கிளப் சார்பாக சீருடை வழங்கும் விழா நடைபெற்றது.

---

ஒ. சிறுவயல் : காரைக்குடி அருகிலுள்ள ஒ. சிறுவயல் அருள்திரு தேனாற்றங்கரை ஆஞ்சநேயர்-திருக்கோயில் ஆறாம் ஆண்டு ஆஞ்சநேயர் ஜெயந்தி விழா—மார்கழி 20௳ (4—1—92) சனிக்கிழமை யன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது.

---

திருமணம் : மதுரை சேரன் சேல்ஸ் கார்ப்பரேசன் உரிமையாளர் நாட்டரசன் கோட்டை வீ. ர. மு. ச ஆறு இராமநாதன் செட்டியார் அவர்கள் செல்வி உலகம்மை என்ற உமா B.Sc (Com. sc)க்கும் கீழ்ச்சிவல்பட்டி திரு, கி நா, பழ. நாராயணன் செட்டியார் அவர்கள் செல்வர் அருணாசலம் B Com. (A.I.I.B.மானேஜர் பேங்க் ஆப் மதுரை லிட் பலவான்குடிக்கும் நாட்டரசன்கோட்டையில் 25—11—91 திங்கள் கிழமையன்று திருமணம் சிறப்பாக நடைபெற்றது

---

கும்பகோணம் : 18-2—1992 அன்று கும்பகோணத்தில் மகாமகம் சிறப்பாக நடைபெறவுள்ளது. 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை மகாமகம் நடைபெறும்.

# பார்வதியின் பாலகனோ?

ஆறுபடை வீடு கொண்ட
    ஆறுமுகன் நீ தானோ?
ஏறுமயில் ஏறுகின்ற
    எம்பெருமான் நீ தானோ?

பால்வடியும் பூமுகத்துப்
    பாலகனும் நீ தானோ?
ஆல் எனவே அழைக்கவரும்
    அரசனிவன் பேர்தானோ?

சேவலெனும் கொடியுடைய
    செவ்வேளும் நீ தானோ?
காவலென வந்து நிற்கும்
    கந்தனுந்தன் பெயர்தானோ?

ஈசனுக்கு மகன்தானோ?
    எழில் உபதேசம் சொன்னவனோ?
பாசமுள்ள பார்வதியின்
    பாலகனும் நீ தானோ?

கவிதைத் தென்றல்
கரு. கருப்பையா B.Sc., M.A., M.Phil, B.Ed
திருப்புவனம்

## மதுரை நகரத்தார் சங்கம் வழங்கும் சிறப்புப் பரிசுகள்

மதுரை நகர விடுதியின் புதிய கட்டிடம் மிக விரைவாகவும் கலையழகு மிக்கதாகவும் கட்டப் பெற்று வருகிறது. சமூகப் பணிக்கும் சமுதாய பணிக்கும் இயல்பாகவே நன்கொடை வழங்கும் நகரத்தார் பெருமக்கள் பலர் இந்தத் திருப்பணிக்கும் சிறந்த முறையில் நன்கொடைகள் அளித்திருக்கிறார்கள். இப்பணியில் நகரத்தார் அனைவருடைய பங்கும் இருக்க வேண்டுமென்பதால் ரூ. 1000 ரூ. 500 ரூ. 250 ரூ. 100 என்று நான்கு வகையான கட்டிட நன்கொடைப் பெறுகைச் சீட்டுக்கள் அச்சிட்டு வழங்கப்படுகின்றன. இந்தச் சீட்டுக்களுக்குக் குலுக்கல் முறையில் சிறப்பான பரிசுகளும் கீழ்கண்டவாறு வழங்கப்படும்.

| | | |
|---|---|---|
| 1. | ரூ. 1000/- | கலர் தொலைக்காட்சி பெட்டி ஒன்று |
| 2. | ரூ 500/- | 16 லிட்டர் கொள்ளவு உடைய குளிர் சாதனப் பெட்டி ஒன்று. |
| 3. | ரூ. 250/- | சலவை எந்திரம் (Washer only) |
| 4. | ரூ. 100/- | முதல் பரிசு—மிக்ஸி ஒன்று<br>2வது பரிசு—மின் விசிறி (Ceeling Fan) ஒன்று<br>3வது பரிசு—பிரஷர் குக்கர் ஒன்று |

இப்பணியில் பங்கேற்று நகரத்தார் பெருமக்கள் அனைவரும் மதுரை 16-வடக்குச் சித்திரை வீதி சரவணா லாட்ஜ் அறை எண் 3ல் இயங்கும் நகரத்தார் சங்க அலுவலகத்தில் உரிய தொகைக்கு ரொக்கம் அல்லது பண விடை (டிராப்ட்) செலுத்தி வளர்ச்சி பணியில் பங்கு எடுத்து பரிசுக்குரிய பெறுகைச் சீட்டுக்களைப் பெற்றுக் கொள்ள வேண்டும் எனச் சங்கச் செயலாளர்கள் திரு. செ. செ. சுந்தரம் M C.N. மாணிக்கம் வேண்டுகோள் விடுத்துள்ளனர்.

# பொதுச் செய்திகள்—டிசம்பர் 1991

காவிரி நீர் தகராறில் நடுவர் மன்ற தீர்ப்பை மத்திய அரசு எற்றுக் கொண்டு 205 டி.எம்.சி தண்ணீரை தமிழ்நாட்டுக்கு கர்நாடக அரசு திறந்து விட வேண்டுமென்ற நடுவர் மன்ற தீர்ப்பை மத்திய அரசு கெஜட்டில் வெளியிட்டது (ஒரு டி.எம்.சி என்பது 100கோடி கனஅடி)

இந்தியாவில் குடும்ப கட்டுப்பாடு திட்டத்தின் காரணமாக பிறப்பு விகிதம் 40 சதவிதம் குறைந்தது.

30 ஆண்டுகளுக்கு பிறகு சீனாப்பிரதமர் லி. பெங் 11—12—91 அன்று இந்தியா வந்தார்.

---

## பொங்கல் இதழில்

1) கவியரசு கண்ணதாசனின் படிப்பு பற்றிய சுவையான செய்தி
2) அன்பு ஜெராக்ஸ் உரிமையாளர் அன்பு சிதம்பரம் செட்டியார் அவர்களுடன் நாம் கண்ட நேர் உரையாடல்
3) டாக்டர் தே. சொக்கலிங்கம் அவர்களின் "பட்டண சுவாமியார்" பற்றிய கட்டுரை
4) கலைவாணி கண்ணன் வழங்கும் திரைச் செய்திகள்
5) கவிதைத் தென்றல் கருப்பையாவின் கவிதைகள்
6) ஷேர் மார்க்கெட் பற்றிய செய்திகள்
7) பொங்கல் பற்றிய செய்திகள்
8) பிரபல திரைபட இயக்குநர் எழுதியுள்ள சுவை நிறுத்த கதை
9) மற்றும் பல சுவையான செய்திகள்

உ

சிவமயம்

# பழநிப் பாதயாத்திரை பயண விபரம்

நிகழும் பிரஜோத்பத்தி ௵ மார்கழி மீ (11-1-92) சனிக் கிழமை முதல் தை மீ 17 உ (31-1-92) வெள்ளிக்கிழமை முடிய (21 நாட்கள்)

பிரஜோத்பத்தி ௵ மார்கழி மீ

| | | | |
|---|---|---|---|
| 27 உ | 11-1-92 | (சனி) | தேவகோட்டை நகரப்பள்ளிக் கூடத்தில் கட்டிவைத்து பூஜை |
| [illegible] உ | 12-1-92 | (ஞா) | காவடிகள் நகர்வலம் வந்து சிலம்பனி பிள்ளையார கோவில் தங்குதல் |
| 29 உ | 13-1-92 | (திங்) | காலை காவடியும் பாதயாத்ரீகளும் புறப்படுதல் பகல், ஊத்தாங்கிணற்றில் [சங்கராபுரம்], காவடி நிவேத்தியம் இரவு குன்றக்குடி |
| 30 உ | 14-1-92 | (செ) | காலை. குன்றக்குடியிலிருந்து புறப்படுதல் பகல் கண்டவராயன்பட்டி கண்மாயில் காவடி நிவேத்தியம். இரவு மருதுபட்டித் தோப்பில் முதல் நாள் பூஜை |

தைமீ

| | | | |
|---|---|---|---|
| 1 உ | 15-1-92 | (பு) | காலை சிங்கம்புணரி சேவுகப் பெருமாள் கோவிலில் காவடி தங்குதல், பகல், மணப் பச்சேரியில் காவடி நிவேத்தியம் [பாத யாத்ரீகர்கள் வெள்ளாளபட்டி வழியாக வருதல்] இரவு. சமுத்திராபட்டியில் இரண்டாம் நாள் பூஜை |
| 2உ | 16-1-92 | (வி) | காலை, நத்தத்தில் வாணியர் பஜனை மடத்தில் பானகபூஜை, பகல்,உப்பாற்றில் காவடி நிவேத்தியம், இரவு, இடைச்சி மடத்தில் மூன்றும் நாள் பூஜை |
| 3உ | 17-1-92 | (வெ) | காலை, திண்டுக்கல் அபிராமி அம்மன் கோவிலில் காவடி தங்கல், பகல், ரெட்டி-யார் சத்திரத்தில் காவடி நிவேத்தியம், இரவு நகரத்தார் ஊருணி என்கிற செம்மடைப்பட்டியில் ஊஞ்சல், நான்காம் நாள் பூஜை |

4ஃ. 18-1-92 (சனி) காலை, செம்மண்டிப்பட்டியில் பானக பூஜை பகல் [ஒட்டன் சத்திரம் கடந்து] ஆழுந்தை வேலன் சந்நிதியில் காவடி நிவத்தியம இரவு, அடையாள வேலை தரிசித்து கலிங்கப்பையா ஊருணியில்(சத்திரப்பட்டி சாலையில்) ஐந்தாம் நாள் பூஜை

5ஃ. 19-1-92 (ஞா) காலை, ஆயக்குடி பெருமாள்கோவில் பானக பூஜை பகல், இடும்பன் குளத்தில் நீராடி, இடும்பன் மலைச்சரிவில் காவடி நிவத்தியம் இரவு, பழநி அன்னதான மடத்தில் முதல் நாள் பூஜை

6ஃ. 20-1-92 (திங்) அன்னதான மடத்தில் இரண்டாம் நாள் பூஜை தைபூசம்

7ஃ. 21-1-92 (செ) அன்னதான மடத்தில் மூன்றும் நாள் பூஜை

8ஃ. 22-1-92 (பு) அன்னதான மடத்தில் நான்காம் நாள் பூஜை மகம் நாளான இன்று பகல் இரண்டு மணிக்கு மேல் புறப்பட்டு மலையில் காவடி செலுத்துதல்

9ஃ. 23-1-92 (வி) அன்னதான மடத்தில் ஐந்தாம் நாள்பூஜை தனியார் அபிஷேகங்கள். "பழம்நீ' பாதயாத்திரைக்குழுவின் சார்பில பட்டக் காரர் மடத்தில் மதிய உணவு.

10ஃ. 24-1-92 (வெ) அன்னதான மடத்தில் அடுப்படி பூஜை. சுவாமி புறப்பாடு தனியார் அபிஷேகங்கள்

11ஃ. 25-1-92 (சனி) மாலையில் சந்தனக்குழம்பு அபிஷேகம் பாத யாத்ரிகள் விடைபெற்று ஊர் திரும்புதல்

12ஃ. 26-1-92 (ஞா) இரவு ஆறு மணி அளவில் காவடி விடை பெற்று ஊர் திரும்புதல்

13ஃ. 27-1-92 (திங்) காவடி வழிநடையாக ஊர் திரும்புதல், பகல் திண்டுக்கல் மலைக்கோட்டை ஐயப்பன் கோவிலில் பூஜை

14ஃ. 28-1-92 (செ) காவடி வழிநடையாக ஊர் திரும்புதல், இரவு சமுத்திராபட்டியில் பானக பூஜை

15ஃ. 29-1-92 (புத) காவடி வழிநடையாக ஊர் திரும்புதல், இரவு மருதுபட்டி தோப்பில் பூஜை

16ஃ. 30-1-92 (வி) திருப்பத்தூர் வழியாக காலை எழு மணி-யளவில் குன்றக்குடி வந்தடைதல், இரவு பூஜை

17ஃ. 31-1-92 (வெ) குன்றக்குடியிலிருந்து புறப்பட்டு தேவ-கோட்டை வந்து சேர்தல்.

வெளியீடு } லெ. மு.மு. முத்துமாணிக்கம்
அமைப்பாளர்
'பழம் நீ' பாதயாத்திரைக்குழு